உ

ஸ்ரீ குருப்யோ நம:

ஹர ஹர சங்கர! ஜய ஜய சங்கர!!

# ஸ்ரீ ஆதிசங்கரரும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளும்



ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாத வேதஸபா
திருவல்லிக்கேணி, சென்னை-600 005.
1977] [ஞானயக்ஞம்

# ஸ்ரீ ஆதிசங்கரரும், ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளும்

ஸ்ரீபகவானுடைய உபதேசமாகிற வேதங்களையும், யாகம் முதலிய ஸத்கர்மாக்களையும், நாஸ்திகர்கள் தடுத்த போது ஸ்ரீபரமேச்வரன் கைலாஸத்திலிருந்து ஸ்ரீசங்கரராக அவதரித்தார். ஐந்தாவது வயதில் உபநயனம் செய்து கொண்டு மூன்று வருஷங்களில் ஸகல வேதசாஸ்திரங்களை யும் கற்றறிந்தார். எட்டாவது வயதில் ஸன்யாஸம் செய்து கொண்டு பதினாறு வயதிற்குள், பாஷ்யம் முதலியவைகளை இயற்றி பல ஸ்தோத்திரங்களையும் ஸாமான்ய மனிதர்கள் கூட பாராயணம் செய்து ஸத்கதியை அடையும்படி இயற்றி யுள்ளார். பின்பு பதினாறு வருஷகாலம் ஹிமாசலம் முதல் ஸேதுவரையில் அத்வைதவித்யையையும், யாகம், அக்னி ஹோத்ரம் முதலிய ஸத்கர்மாக்களைச் செய்யவேண்டிய அவசியத்தையும் பற்றி பிரசாரம் செய்துவிட்டு கைலாஸம் சென்றார். இப்படி முப்பத்திரண்டு (32) வருஷங்கள் பூமியில் வசித்தது எத்தனையோ வருஷங்கள்போல் ஆயிற்று. அப்படி இருந்தும் ஸ்ரீசங்கரருடைய நூல்களை இன்றும் எத்தனையோ மேதாவிகள் இந்நாட்டிலும் வெளிநாட்டிலும் கூட படித்து வருகின்றனர். அன்று சங்கரர் எப்படி பாரத தேசம் முழுவதும் விஜயயாத்திரை செய்தாரோ அப்படி, நமது ஜகத்குரு காஞ்சி காமக்கோடி பீடாதிபதிகளும் அத்வைதவித்யையையும், அக்னிஹோத்ரம் முதலிய ஸதகர் மாக்களையும், நான்கு வேதங்களையும் நமது பாரததேசத்தில் எங்கும் பரவச்செய்து வருகிறார்கள். இவர்களை ஆதிசங்கரர் எனவே பல மஹான்கள் கூறுகின்றனர். இவர்களிடம் சிறிது நேரம் தங்கி வசித்தவர்கள் மனச்சாந்தியுடன்

# ஸ்ரீ பகவத்பாதாளும் ஸ்ரீ பெரியவாளும்

ஸதாசிவ ஸமாரம்பாம் சங்கராசார்ய மத்யமாம் |
அஸ்மத் ஆசார்ய பர்யந்தாம் வந்தே குரு பரம்பராம் ||

இன்றைக்கு சுமார் 2000 வருடங்களுக்கு முன்பு, பாரத தேசத்தில் அறம் குறைந்து, மறம் மலிந்து, வேத தர்மத்துக்குப் புறம்பான பல மதங்கள் தோன்றி, நாஸ்திகம் தழைத்து, ஆஸ்திகம் இளைத்து, வேத சமயமானது மெலிந்து, செயலிழந்து நின்றபோது கைலயங்கிரியில் வடவாயிலின்கீழ், சின்முத்திரை தாங்கி, ஸநகாதியருக்கு மௌனோபதேசம் செய்துகொண்டு, தன்னிலேதானே தவமிருந்த யோகப் பிழம்பாய் தக்ஷிணாமூர்த்தியான பரமேஸ்வரன் நமது தேசத்தின் அவல நிலையையும் தடுமாறுகத் திசை தெரியாது குழம்பியிருந்த மக்களையும், மறுமலர்ச்சிசெய்து, புத்துயிரூட்டத் திருவுளங்கொண்டு, தென்னாட்டில், மலையாள தேசத்தில், சிவகுரு ஆர்யாம்பிகை தம்பதிகளின், பன்னெடுங்கால தவப்பயனாய் அவர்களுக்குக் குழந்தையாய் அவதரித்தார். சங்கரன் என்று பெயரிடப் பட்டார். பரமேச்வரனை மகனாய் அடைந்த பாக்யசாலியான சிவகுரு, காலகதியடையவே, தாயார் சங்கரருக்கு 5 வயதில் உபநயனம் செய்வித்து, குருகுலவாசத்திற்கு அனுப்பி வைத்தார். பூரணமான சகல கலைகளுக்கும் அதிபதியான அவர் மானுடசரீரம் கொண்டதற்கேற்ப கலைகளை அப்யஸித்ததாகச் சொல்லலாமே தவிர, கலைகள் அவரைச் சரணடைந்தன. எட்டுவயதில், பூர்ணா நதியில் ஸ்னாநம் செய்துகொண்டிருந்தபோது முதலையால் சங்கரரது கால்கள் கௌவப்பட்டு தாயிடம் இதையே காரணமாகக் காட்டி

ஸந்யாஸம் பெற்றுக் கொண்டு, முதலை வாயிலிருந்தும், ஸம்ஸார பந்தத்திலிருந்தும் தன்னை நிரந்தரமாக விடுவித்துக் கொண்டு, தேவரும் தேடும் தன் திருப்பாதங்களால் குருவைத்தேடி நடந்தார். நர்மதா நதிக்கரையில் கோவிந்த பகவத் பாதரிடம் உபதேசம் பெற்று, அவருடன் சிலகாலம் தங்கி, பிறகு அவர் உத்தரவின்பேரில் ப்ரம்ஹஸூத்ரம், பகவத்கீதை, முக்யமான உபநிஷதங்கள் இன்னும் பலவற்றுக்கு அழகிய பாஷ்யங்களைச் செய்தார். தனது 32-வது வயதுக்குள் குமரி முதல் இமயம்வரை பாதயாத்திரையாகவே நடந்து சென்று, தேசத்தில் ஏற்பட்டிருந்த தார்மீகப் பஞ்சத்தை நீக்கி, துர்மதங்களையும், துராசாரங்களையும் வெற்றி கொண்டு, ஷண்மதங்களை ஸ்தாபித்து வேதத்தில் சொல்லப்பட்ட முறைப்பாட்டுடன் வழிபாடு முறைகளை அமைத்து அவைகளால் மனிதர் முடிவாக அடையவேண்டிய அத்வைத சித்தாந்தத்தையே ஆறு மதங்களுக்கும் குறிக்கோள் என்பதைத் தெளிவுபடுத்தி, கைலயங்கிரி சென்று பரமசிவனிடமிருந்து, யோகம், மோக்ஷம், முக்தி, வரம், போகம் என்ற ஐந்து ஸ்படிக லிங்கங்களையும் பெற்றுத் திரும்பிவந்து, பத்ரிநாத்தில் ஜ்யோதிர்மயபீடம், த்வாரகையில் காளிகாபீடம், ஜகன்னாதத்தில் விமலாபீடம், சிருங்ககிரியில் சாரதாபீடம், காஞ்சியில் காமகோடிபீடம் ஆகிய ஐந்து பீடங்களைப் பிரதிஷ்டை செய்து, காஞ்சியில் சர்வக்ஞ பீடம் ஏறி யோக லிங்கத்தைக் காஞ்சியில் பிரதிஷ்டை செய்து, அங்கேயே தானும் வசித்து அவதார காரியம் முடிந்து காஞ்சியிலேயே யோக மார்க்கமாய் கைலை திரும்பினர்.

காஞ்சி காமகோடி பீடத்தில் 68–வது பீடாதிபதியாகத் தற்போது அருளாட்சி செய்துவரும் நமது குருநாதர் கி. பி. 1894 ஜய வருடம் வைகாசிமாதம் 8௳ அனுஷ நக்ஷத்திரம் கூடிய புண்யதினத்தில், பகல் நாழிகை 19க்கு மகாலக்ஷ்மி அம்மாளுக்கும், சுப்ரமண்ய சாஸ்திரிகள் என்ற அந்தணப் பெரியாருக்கும் இரண்டாவது மகனாக அவதரித்தார்கள்.

தென்னார்க்காடு ஜில்லா, விழுப்புரம் நகரம், நவாப்பு தோப்புக்கு அருகில் உள்ள அக்ரஹாரத்தின் கீழ்ப்பகுதி

யில் அக்காலத்தில் கோவிந்தராயர்வீடு என்னும் பெயருடன் விளங்கியதும், தற்காலம் நமது புண்யஸ்தலமாக வணங்கி தரிசிக்கப்படுவதுமான புண்ய பூமியில் நமது தவப்பயனை பெரியவாள் அவதரித்தனர். எவ்வாறு ஸ்ரீ இராமன் பிறந்த அயோத்தியும், ஸ்ரீகிருஷ்ணன் பிறந்த துவாரகையும் உயர்ந்ததாகக் கருதப்படுகிறதோ அவ்வாறே ஸ்ரீபெரியவாள் அவதரித்த விழுப்புரமும் மஹா பாக்யம் செய்தது என்பதில் சந்தேகமில்லை. அஞ்ஞானத்தில் உழலும் மக்களுக்கும் 'ஞானம்' என்ற விழிப்பை அளிக்க நமது குருநாதர் ஸ்ரீ பெரியவாள் அவதரிக்கப் போகிறார் என்பதற்காகவே விழுப்புரம் என்று பெயர் ஏற்பட்டிருக்கலாம். 13 வயதுவரை ஆங்கிலப்படிப்பு. போதிக்கப்பட்ட கல்விவேறு 13 வயதில் சுவாமிநாதன் என்று பெயர் தாங்கிய குழந்தையை, முன்பே, பரமேச்வரன் மறு அவதாரம் செய்து தான் ஸ்தாபித்த பீடத்தில் அமரப்போவதைத் தெரிந்து வைத்திருந்ததேபோல், அவருக்கே முன்னறிவிப்பு இல்லாமல் காஞ்சி காமகோடிபீடம் தன்பீடத்தின் அறியணையில் அவரை ஏற்றிவைத்துப் பெருமை கொண்டது. ஸ்ரீ சுவாமிநாதன் பராபவ வருடம் மாசி மாதம். 2-ந் தேதி புதன்கிழமை 13-2-1907ல் கலவையில் காஞ்சி காமகோடி பீடாதிபதியாக அமர்ந்தபோது அவருக்கு அளிக்கப்பட்ட தீக்ஷாநாமம்-ஸ்ரீசந்த்ரசேகரேந்த்ர சரஸ்வதி ஸ்ரீபாதாள். 1908-ம் வருடம் பிப்ரவரி மாதம் தனது 14-வது வயதில் திருவானைக்காவிற்கு விஜயம் செய்து ஜம்புநாதேச்வரர் அகிலாண்டேச்வரிக்குக் கும்பாபிஷேகமும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளுக்குத் தலைமுறை தொட்டு உரித்தான தாடங்கப்பிரதிஷ்டையையும் செய்தார்கள்.

புறகு பல தலங்களைத் தரிசித்துவிட்டு கும்பகோணத்திற்குத் திரும்பி வந்து, இங்கு சில காலம் தங்கியும் மகேந்திர மங்கலத்தில் பர்ணசாலை அமைத்து அதில் தங்கி சகல வேத வேதாங்கங்களையும் சாஸ்திரங்களையும் தக்க பண்டிதர்களைக் கொண்டு அபிவிருத்தி செய்துகொண்டு தனது விநயத்தாலும், மேதா விலாசத்தாலும் பிரகாசித்தார்கள். 1914-ல் கும்பகோணம் மடத்துக்குத் திரும்பிவந்தார். அங்கே நான்கு வருடங்கள் தங்கி கலைகளுக்கு ஒரு பெருநிதி

யாகவும், மேதைகளும் வியக்கும் பாண்டித்யம் நிறைந்த வராகவும் அருளாட்சி செய்தார்கள். பண்டிதர்களையும் வித்வான்களையும் ஆதரித்து அவரவர்க்கு உரிய மரியாதைகள் செய்து பெருமைப்படுத்தினர்.

1919ல் ஸ்ரீ ஆசார்யாள் விஜய யாத்திரையை மேற்கொண்டு 20 வருட காலம் தன் திருப்பாதங்களால் பாரதத்தின் மண்ணை மேலும் பரிசுத்தமாக்கினர்.

2000 வருடங்களுக்கு முன்பு ஆதிசங்கரர் சீர்திருத்தி வைத்த நமது உயர்ந்த சநாதனமதம், மறுபடியும் ஆங்கில மோகத்தாலும், மேலை நாகரீகத்தாலும் நிலைகுலைந்தது. மக்கள் தன் சுதந்திரத்தைப் பறிகொடுத்ததோடு "தர்மம் எது? அதர்மம்எது?" என அறியாது தடுமாறினர். மூடவாதங்களாலும், குருட்டுத்தனமான செய்கைகளாலும் மனம் போனபடித்தடுமாறிய பாரதத்தை லௌகிகத்துறையில் காந்தியும், வைதிகத் துறையில் பெரியவாளை ஒத்த சில மகான்களும், தன் தேசம், தன் மதம் என்று நினைப்பதற்குக் கற்றுத் தரும்படி ஆயிற்று. நாளடைவில் தர்மத்தின் அடிப்படையில் தவத்தின் திரு உருவான ஆசார்யாள் வைதிக மார்க்கத்தில் உறுதியும், ஆத்ம பலமுமே உறுதுணையாகக் கொண்டு பீடு நடை போட்டபோது, மக்கள் தங்களையறியாமலே அவரைப் பின் தொடர்ந்தனர். பெருமையின் பிறப்பிடமாய், எளிமையிலும் எளிமையாய், அன்பே உருவாய் நாம் செல்ல வேண்டிய வழியை நன்கு செப்பனிட்டுத் தந்த தெய்வமாக இன்றைய ஆசார்யாள் விளங்குகிறார்கள்.

"ஏழையா? தானம் செய்ய முடியவில்லையா? தினம் ஒரு பைசாவும், ஒரு பிடி அரிசியும் ஒரு கலயத்தில் போட்டு வாருங்கள். அதுவே உங்களை ரக்ஷிக்கும் பெருநிதி"

"சிறுமிகளே! ஆன்மீக மறுமலர்ச்சிக்குக் காரணமான ஆண்டவனை, திருப்பாவை, திருவெம்பாவை கொண்டு பாடுங்கள். அது உங்கள் தெய்வீக குணங்களை வளர்த்து தெய்வீக சம்பத்து நிறைந்தகுணவானாகிய கணவனை அடையும்படிச் செய்யும்! கணவனும், மனைவியும் கருத்தொருமித்தால் நல்ல சந்ததிகள் உண்டாகி நாட்டில் நலம் பெருகும்."

"சிறுவர்களே! தினம் காலையில் 'நாராயண-நாராயண' என 12 முறை சொல்லி சூர்ய நாராயணனை வணங்குங்கள். அவன் உங்களுக்கு ஆரோக்யமும் ஐச்வர்யமும் அளிப்பான்."

"ஸ்திரீகளே! எளிமையாய் பகட்டின்றி பண்போடு வாழுங்கள். அதுவே உலகத்துக்கு நன்மை. எளிமையாய் எதையும் வீணடிக்காமல் இருங்கள். காய்கறித் தோலியா? கழுநீரா? அதை வீணாக்காது பசுவுக்குக் கொடுங்கள்".

"மறைந்து வரும் வேதத்தை அழியாமல் காக்க மாதம் ஒரு ரூபாயாவது கொடுங்கள்"

என்று இவ்வாறெல்லாம் சுலபமாக யாரும் செய்யக் கூடிய விதத்தில் அறம் வகுத்துத் தருகிறார்.

மடாதிபதிகளை ஒன்று சேர்த்து, "எல்லோரும் ஒன்று சேர்ந்து 'மதச்சார்பின்மையால்' வரும்-அதுவும் ஹிந்து மதத்தை—அதன் ஆணி வேரை நறுக்குவதற்கொப்ப நடக்கும் காரியங்களிலிருந்து, நமது மதத்தை நாம்தான் ரக்ஷிக்க வேண்டும். உயிர் இருந்தால் அது மறுபடி தளிர்த்துத் தழைக்கும். மற்ற மதத்தினருக்கும் உள்பட நிழல் தந்து, கனி தந்து, களைப்பையும் பசியையும் ஆற்றும், உலக அன்னையை யொத்த நமது த்வேஷமற்ற-மதத்தை, நாம் அழியாமல் பாதுகாப்போம்" என்று பாடுபடுகிறார். உரத்த குரலில் கூட்டங்கள் போட்டு, பிரகடனப் படுத்தாமல் அமைதியான, அடக்கமான முறையில், வறிய வருக்கு, பஞ்சத்திலும் வெள்ளத்திலும், தீயிலும் ஆங்காங்கு உள்ள வர்களைக் கொண்டு ஆதரவளிக்கச் செய்கிறார். "சிற்பிகளே! ஸ்தபதிகளே! பண்டைய நாட்டுக் கலைகளால் பரமனை வழி பட்டு அவனை மையமாகக் கொண்டு உயர்ந்து அவனுடைய அருளால் சிறப்பால் வாழுங்கள்!" என்று கூறுகிறார் ஸ்ரீ பெரியவாள். "மூல விக்ரஹங்களைப் பொருட்காட்சிக்கு களவாடி விற்பதையே தொழிலாகக் கொண்டாலும், மூல மான தெய்வத்தையும், மனத்தையும் விற்றுவிட்டால் நாம் நம் நாட்டில் மட்டுமல்ல உலகிலே தலை நிமிர்ந்து நடப்பது எப்படி?" என்று உள்ளூர உருகுகிறார் இம் மஹான்.

எல்லோரும் இந்நாட்டு மன்னர், என்று சொல்லப்படு கிறது. மன்னர் மன்னராக இருந்தாலல்லவா நாடு வளமுறும்! மன்னர் தன் வீட்டைச் சுற்றி நெருப்பு வைத்துக் கொண்டு, தன்னையே இழிவு படுத்திக்கொள்வது நல்லதா? ஆஸ்பத்திரி நோயாளிகளுக்கு வாராவாரம் அவரது அருள் பிரஸாதம் தேடிப்போகிறது. அநாதைப் பிரேதங்களுக்கு அந்தந்த வழக்கப்படி இனமாக ஸம்ஸ்காரங்கள் நடக்கின்றன. ஆலயங்களை ஜீர்ணோத்தாரணம் செய்தல், ஏழையான கன்னிகைகளுக்கு விவாஹம் செய்வித்தல், நமது புராதனக் கலைகளுக்கு உயிரூட்டி வருஷா வருஷம் ஆகம-சில்ப-சாஸ்திர சதஸ், வேதத்தை ரக்ஷிக்க அதற்கு ஒரு சதஸ் என்றும் சகல துறைகளிலும் மக்கள் நலனையும், கடவுள் சிந்தனையையும் தவிர வேறு நினைவே அற்ற பெரியவாள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இரவு பகல் இதே சிந்தனையாக. அமைதியாகப்பணிசெய்து மக்களை அன்பால் ஒன்றுபடுத்து கிறார். எளிமையின் இருப்பிடமாய், ஏழைப்பங்காளனாய், மக்கள் குரலே மகேசன் குரலாக நேசிக்கும் பெரியவாள் சூரியனுக்கு ஒப்பானவர். குருவிடம் நாம் நடந்து கொள்ள வேண்டியது எவ்வாறு என்பதை அவர் குருவுக்கு அவர் செய்யும் மரியாதைகளிலிருந்து தெரிந்து கொள்ளலாம். ராமேச்வரத்தில் சலவைக் கல்லால் ஆதி சங்கரருக்கு எடுத்திருக்கும் சிலைகளே அந்த நினைவுக்கு, நன்றி மறவாமைக்கு உதாரணம். நன்றியோடு நினைக்கவே தெரியாத நமக்கு குரு க்ஷேத்திரத்திலுள்ள கீதோபதேசச் சின்னம், நமது பண்பாட்டையும், நாம் நடக்கவேண்டிய முறைகளையும் எடுத்துக் காட்டுகிறது.

சூரியன் எப்படி குடிக்க உபயோகமற்ற கடலிலிருந்து நீரை உறிஞ்சி நன்னீராகிய மழையால் நானிலத்தைச் செழிக்க வைக்கிறானோ அதே போல், பெரியவாள் கசடர்களாகிய நம்மிடமிருந்தும் நன்மையை உண்டு பண்ணி, நானிலத்தில் அறம் செழிக்க வைக்கிறார்.

ஆதிசங்கர பகவத் பாதருக்கு ஒப்பான தவமும், கீர்த்தியும், எளிமையும், வலிமையும் வாய்ந்த நமது பெரியவள் ஆயிரம் மடஸ்தாபனங்கள் ஏற்படுத்தலாம், மிக

அழகாக நடத்தி உலகை உயர்த்தலாம். ஆனாலும் தொண்டருக்குத் தொண்டன்போல் வழி வழி வந்த பெருமையை வானுற உயர்த்துவதுவே அவர் விருப்பம். தன்னை அண்டி வருபவர்களும் வழிவழி வந்த பழைய வழக்கங்களைக் கடைப்பிடிப்பதே அவருக்கு ஆனந்தம். சுகமான சயனத்தைத் துறந்து கட்டாந்தரையில் சயனித்திருப்பார். பழங்கள் கூடை கூடையாய்க் காத்திருக்க பச்சைத் தண்ணீர் கூட ஊற்றாமல் பிரம்மானந்தத்தில் லயித்திருப்பார். எத்தனை தெரிந்தவரானாலும் "இது யார்," இது யார்? என்றே கேட்பார். ஒருக்கால் தத்துவத்தை விளக்கும் கேள்வியோ என்னவோ! நாம் அன்போடு அளிக்கும் அற்பப்பொருளைக் கைகளால் அளைந்து அளைந்து ஆனந்தப்படும்போது குசேலரின் அவலை உட்கொண்ட கண்ணன் நினைவே வரும்.

நான் அறிந்த வரை பெரியவாள் என்ற நமது 68-வது காஞ்சி காமகோடி ஆசார்யாளைப்பற்றிய உட்பொருள் இதுவே.— அது கடலை விட ஆழமானது. நவநிதிகளை உள்ளடக்கியது. ஆகாயத்துக்கு ஒப்பானது, கடலின் உள்ளே அடங்கிய நிதியங்களையும், ஆகாயத்தில் அடங்கிய அண்டசராசரங்களையும் சிறுகுழந்தை சுழலிடுவதுபோல் உள்ளது தான் நம் முயற்சி, ஆனாலும் குழந்தை 'வானம்' இத்தனை தூரம் என்று இரண்டு கைகளாலும் பெரிதாய் காட்டும். சமுத்திரம் இவ்வளவு பெரிது என்று அதே இரண்டு கைகளாலே காட்டும். அதே போலத்தான் அவர்களைப்பற்றி நாம் எழுதுவதும். குழந்தையாதலால் யாரும் நம்மைப் பரிஹஸிக்கமாட்டார்கள்.

சாக்ஷாத் பரமேச்வரஸ்வரூபமாகவும், உள் விழிப்பாகவும் உள்ள குருவான அந்த ஞானக்கொழுந்து திருவண்ணாமலையில் தோன்றிய ஜோதிஸ்வரூபமாக வளர்ந்து எல்லோருடைய தாபத்ரங்களையும் போக்கி யாவருக்கும் மங்களத்தைச் செய்துக்கொண்டு பன்னெடுங்காலம் வாழி! வாழி!! வாழி!!!

# ஆதிசங்கரரும் இன்றைய சங்கரரும்

ஆதிசங்கரர் ஓர் அதிசயமான ஏற்பாட்டைச் செய்தார். அதாவது தாம் ஸ்தாபித்த பீடங்களில் ஆரோகணிக்கும் அனைவருக்கும் 'சங்கராசார்யர்' என்ற தமது பெயரே வழங்குமாறுச் செய்தார். தாமே என்றென்றும் பீடாதிபதிகளுக்குத் தோன்றாத் துணையாக இருக்கக் கருணை கூர்ந்தே அவர் இப்படிச் செய்திருப்பார் போலும்! ஆயினும் அந்தப் பெயரைச் சூட்டிக் கொண்டுள்ளவர்களில் ஒரு சிலரிடம் அவரது உயர் பாங்குகள் விசேஷமாகப் பொதிந்திருந்து, அவர்களும் மகத்தான ஆசாரியர்களாக வாழ்ந்ததை ஆசாரிய பீடங்களின் வரலாறுகளில் காண்கிறோம். இன்று நம் பெரியவாளைத் தரிசிக்கும் எவரும் தம்மை அறியாமலே 'இவர் ஆதிசங்கரரின் அவதாரமே' என்று கூறக்கேட்கிறோம். ஆதிசங்கரரின் பெருமைகளையும் பெரியவாளின் பெருமைகளையும் அறியாதாருக்கும்கூட இவரைப் பார்த்த மாத்திரத்தில் இவ்வாறுச் சொல்லத் தோன்றுகிறது. ஞானம், பக்தி, கருணை, எளிமை இவற்றால் இருவரும் ஒன்றாக இருப்பதால்தான், அதுவே பொதுமக்களை இப்படி பேசச் செய்கிறது.

ஆதிசங்கரர் வரலாற்றைப் பார்க்கையில் அவர் பௌத்தம் சமணம் முதலிய அவைதிக மதங்களையும், கர்ம மீமாம்சை வைசேஷிகம் முதலிய வைதிக மதங்களையும், காபாலிகம் முதலிய உக்கிரமான சமயங்களையும் நிராகரணம் செய்து நாட்டில் அத்வைத வேதாந்த சமயத்தை நிலை நாட்டினார் என்று தெரிகிறது. அவர் இன்னன்னாருடன் வாதம் புரிந்து வென்று அத்வைதமே பரம சத்தியமானது என்று நிலை நாட்டினார் என்று சொல்கிறோம். ஆதி ஆசார்யர்களின் அவதாரம் நிகழ்ந்ததே இதற்காகத்தான்.

இன்று நம்மிடை வாழும் ஸ்ரீ காமகோடி ஜகத்குரு அவர்களின் சரிதத்தைச் சொல்லும்போது இவ்வாறு அறுதி யிட்டு உறுதியாக அவர் ஆஸ்திகத்தையோ, ஆத்மிகத் தையோ, அத்வைதத்தையோ நாடெங்கும் நிலைநாட்டி விட்டதாகச் சொல்ல முடியுமா ?

சத்திய ஸ்வரூபமான ஸ்ரீ பெரியவர்களைப் பற்றிய விஷயமாதலால் நானும் உள்ளத்துக்குக் கள்ள மில்லாமல் இருக்கவேண்டும் என்பதால் மேற்சொன்ன வினவை மழுப்பி அழித்து விடாமல் அதில் தீர்க்கமாகச் சிந்தனையைச் செலுத்தினேன். முடிவில் அன்றிருந்த சங்கரரே தான் இன்றுள்ள சங்கரர் எனினும், அவர்கள் அவதரித்துச் செயலாற்றிய சூழ் நிலைகளில் உள்ள பெருத்த மாறுபாட்டை உணர முடிந்தது. வியக்திகளிடையே சர்வ சாம்யமான ஒற்றுமை. ஆனால் அந்த வியக்திகள் சஞ்சரித்த சூழ்நிலை யில் வேற்றுமை.

மற்ற அவதாரங்களுக்கும் பகவத்பாதர்களின் அவதாரத் துக்குமுள்ள ஒரு வித்தியாசத்தை ஸ்ரீ பெரியவர்கள் வெகு அழகாக எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். மற்ற அவதாரங்களின் காலத்தில் அசுரர்கள் என்று தனியாக ஒரு ஜாதியார் இருந்தனர். அவர்களை சம்ஹாரம் செய்ய பகவான் அவதரித்தார். ஆனால் கலியிலோ ராக்ஷஸர்கள் தனியாக இல்லை. மக்களின் பத்திக்குள்ளேயே புகுந்து விட்டார்கள். ஆனால் மக்களையெல்லாம் சம்ஹாரம் செய்ய பகவான் அவதரிப்பதற்கில்லை. எனவே தான் சம்ஹார அவதாரங்கள் செய்த விஷ்ணுவிடம் பொறுப்பைத் தராமல், தக்ஷிணாமூர்த்தி சிவமே மக்கள் அறிவை தெளிவித்து அசுரத் தன்மையைத் துரத்தும் ஞானகுரு சங்கரராகத் தோன்றினார்— என்று ஸ்ரீ பெரியவாள் சொல்கிறார்கள்.

மற்ற அவதாரங்களுக்கும் பகவத்பாதரின் அவதாரத்துக் காலத்துக்கும் இத்தகைய மாறுபாடு இருந்தது எனில் பகவத் பாதரின் அவதார காலத்துக்கும் நம் பெரியவாளின் அவதார காலத்துக்கும் இடையிலும் ஒரு மாறுபாடு உள்ளது, ஆதி சங்கரரின் காலத்தில் பௌத்தமோ சமணமோ கர்ம மார்க்க மோ தர்க்கமோ நரபலி வழிபாடுகளோ—எதுவாயினும் மக்களுக்கு மத உணர்ச்சி என்று ஒன்று இருந்தது அந்த மத உணர்ச்சியை அவர்கள் தவறான பாதையில் செலுத்தியிருந் ததுதான் அன்றைய உபாதை. மக்கள் பின்பற்றிய பல தவறான மார்க்கங்களுக்குத் தலைவர்களாகப் பலர் இருந்தனர். இவர்களை ஆதிசங்கரர் வாதில் வென்றவுடன் நாடே அவரது நெறியைத் தழுவியது.

ஆனால் நமது பெரியவாள் பீடாதிபத்யம் ஏற்றதிலிருந்து இருந்த சூழ்நிலையில் மதஉணர்ச்சி என்பதே நசித்துப் போக லாயிற்று. விஞ்ஞானம், மேல் நாட்டு வாழ்முறை ஆகியன தடபுடலாகக் கிளர்ந்தன ஒருபுறம். சுதந்திரப் போராட்டம் காரணமாக சுதேசிய அரசியல் உணர்ச்சி கொந்தளித்து எழுந் தது மறுபுறம். சுதேசியம் என்று பேசிப் போராடிய தலைவர் களில் பெரும்பாலாரும் மனப்போக்கில் மேற்கத்திய உலகாயத வாழ்முறையைத்தான் முன்மாதிரியாகக் கொண்டிருந்தனர். மொத்தத்தில் மதம் என்பது வேண்டாம் என்ற அபிப்பிராய மே வெகுவாகப் பரவலாயிற்று. தேச விடுதலைப் போராட்டத் துக்கு முதலிடம் தரப்பட்டதால் அதுவே மக்களை முற்றிலும் ஈர்க்கத்தொடங்கியது. ஏதோ ஒரு ரூபத்தில் மதஉணர்வு என் பது இருந்தகாலத்தில் அதைச் செம்மை செய்து தருகின்ற பணியே ஆதி சங்கரருக்கு அமைந்தது. ஆனால் நம பெரிய வாளுக்கோ நலிந்து நசிந்து வருகிற மத உணர்வுக்குப் புத்துயிர் ஊட்ட வேண்டிய மிகப்பெரிய பணி அமைந்து விட்டது. இருக்கின்ற ஒன்றை மாற்ற வேண்டிய பணி மட்டு மே ஆதி சங்கரருக்கு ஏற்பட்டது. ஆனால் செத்துவிட்ட ஒன்றை அல்லது செத்துக் கொண்டிருக்கற ஒன்றை, உயிர்ப் பிக்கச செய்யும் அசாதாரணமான பணி நம் பெரியவாளுக்கு ஏற்பட்டு விட்டது. ஆதிசங்கரர் போல் இவர் வாதம் செய்து வெல்வதற்கு ஒரு சில தலைவர்கள் இல்லை. ஆதிசங்கரர் காலத்தைவிட இப்போது ஜனப் பெருக்கம எவ்வளவு உயர்ந்து விட்டது என்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டும். ஆதி சங்கரரின் காலததுச் சிறிய சமுதாயத்துக்குள்ளும் நல்ல கட்டுபபாடு இருந்தது. குடும்பததுக்குள் குழந்தைகள் பெற் றோருக்குக் கட்டுப்பட்டிருந்தனர். குடும்பங்கள் ஒரு நாட் டாண்மைக்கு அடங்கியிருந்தன. தவிரவும் பண்டிதர்களுக்கு மற்றவர்கள் கட்டுப்பட்டு, அவர்கள் தழுவும் கொள்கைகளை த ாமும் தழுவினர். மொத்தத்தில் மக்கள் யாவரும் மன்ன னுக்குக் கட்டுபட்டிருந்தனர். கட்டுபாடுள்ள சமூகத்தில் சீர் திருத்தம் செய்வது சாத்தியம். ஆனால் நவீன காலத்தின் முதல் இலட்சணம், அல்லது அவலட்சணமே கட்டுப் பாடின் மை தான். உலகில் எங்கணுமே இவ்வுணர்வு பொதுவாகப் பரவியுள்ளதெனில் இந்தியாவிலோ. அதிவிசேஷமாகப் பரவி இருக்கிறது. அந்நிய ஆட்சிக்குக் கட்டுப்படக்கூடாது என் பதற்காகப் போராடியதாலோ என்னவோ, மன்னன் கட்டுப் பாட்டை மீறியதறகுத் தொடர்பு சங்கிலியாக மற்ற நல்ல கட்டுப்பாடுகளும மறைந்துவிட்டன. அவரவருக்கும் தான் தோன்றித் தனம் மிகுந்துவிட்ட இன்று ஒவ்வொருவரையும் திருத்த ஓர் ஆசார்யன் வாழ்நாள் முழுதும் உடன் இருந்தால் தான் ஒருகால் முடியும். இந்நிலையில் யாருடன் வாதிட்டு

எப்படிப் பொதுவில் சில சித்தாந்தங்களையும் ஆசரணைகளையும் நிலைநாட்டுவது.

இதையெல்லாம் எண்ணிப்பார்த்தால்தான் நம் பெரியவாள் செய்துள்ள சாதனை நமக்குப் பிரமிப்பூட்டுகிறது. ஆதி சங்கரர் விஷயத்தில் பெரிதாக ஒன்றை சுட்டிக்காட்டுவது போல், நம் பெரியவாள் இன்ன செய்தார் என்று குறிப்பிட்டுச் சுட்டிக்காட்ட முடியாது. ஆனால் இப்படியோர் அவதாரம் நிகழாவிடில் எந்தநிலைக்கு நாடு சென்றிருக்கும் என்பதை எண்ணினால், இத்தனியொரு மனிதர் செய்துள்ள சாதனையை எண்ணி மலைப்போம். இப்படியொரு ஜகத்குரு தோன்றி இராவிடில் இன்று கேட்கும் வேதசப்தத்தில்—இன்று நடக்கும் புராண தார்மீகப் பிரவசனங்களில்—இன்று எழுதப்படும் ஆஸ்திக நூல்களில்-இன்று நிகழும் கும்பாபிஷேகங்களில் ஆயிரத்தில் ஒரு பங்கைக்கூட இந்நாட்டில் காணமுடியாது என்று எந்த சந்நிதியிலும் சத்தியம் செய்யலாம். இன்னமும் இத்தேசத்தில் சிலரிடமாவது பண்டைய ஆசரணைகள் காணப் பெருகின்றன வெனில், அந்த ஆசரணைகளைத் தாமே பின்பற்ற முடியாவிடினும் அவற்றை இழித்துக் கூறாமல் மதிப்புடன் பார்ப்பவர்களின் எண்ணிக்கைப் பெருகிவருகிறதெனில் இதற்குக் காரணம் நம் பெரியவாள் தான் என்பதில் இம்மியும் ஐயமில்லை.

புதிதாக ஒருவர் ஒரு கிணற்றை அகழ்ந்தாலும் போதும், அந்த கிணறு உள்ள வரையில் அதனை அகழ்ந்தவரையும் நினைத்துப் பார்ப்பார்கள். ஆனால் அலைமோதிக் கொண்டிருக்கும் ஒரு பழைய ஏரியில் உடைப்புக்கள் ஏற்பட்டபோது அடக்கமான முறையில் அந்த உடைப்புக்களையெல்லாம் ஒருவர் அடைத்துவிட்டு ஒதுங்கி நின்றால் அவர் செய்த பணி யாருக்கும் விசேஷமாக தெரியாது. அவர் அப்பணியைச் செய்திராவிடில் ஊர் வெள்ளக் காடாகி இருக்கும். அவ்வாறு ஒரு வெள்ளத்தில் நாம் அடித்துக் கொண்டு போகப்படாமல், நாமே அறியாதவாறு நம்மை ரட்சித்த நாயகனே ஸ்ரீ பெரியவாள்.

இந்தியாவின் இந் நூற்றாண்டு சரிதத்தை எழுதுபவர்கள் காந்திஜி அஹிம்ஸைப் போராட்டம் நடத்தி சுதந்திரம் பெற்றதையே தனி மனிதசக்தியின் அற்புத உதாரணமாக எடுத்துச் சொல்வார்கள். காந்திஜி சாதித்தது ஓர் அற்புதம் தான், ஐயமில்லை. ஆனால் சுதந்திர உணர்வு மக்களனைவரிடமும் தீராத வேட்கையாகி, நாடே ஒரு மனிதனைத்திரண்டு அவர் பின் சென்றது, மேலும் உலகெங்கனுமே ஜனநாயக சுதந்திர

உணர்வு பெருகி வருகையில் பிரிட்டன் பண்டைய காலனி ஆட்சி முறையை நீடிப்பதற்குத் தார்மிக ஆதரவு இல்லை. இவை காந்திஜியின் பணியைச் சுலபமாக்கின.

ஆனால் பெரியவாளோ நாடே புறக்கணித்த அல்லது மறுத்த சநாதன தருமத்துக்காகத் தனிமனிதராகப் போராடி—'போராட்டம்' என்ற கொடிய பெரிய வார்த்தையைக் கூட உபயோகிக்க முடியாதபடி பரமசாந்தமாக முயன்றே—அதனை உயிர் போகாமல் காத்து வருகிறார். இதுவே இந்த நூற்றாண்டின் பேரற்புதம்.

காந்திஜியின் பெரிய வெற்றி பற்றி நாம் சொன்னபோதிலும் இன்று அவர் இருந்தால் அதில் பெருமைக் கொள்ள மாட்டார். ஏனெனில் சுதந்திரப் போராட்டத்தைவிட மக்களின் சத்தியம், ஒழுக்கம், எளிய வாழ்வு ஆகியவற்றையே அவர் பெரிதாக மதித்தார். அவர் போற்றிய இப்பண்புகளில் அவரது கட்சியினரை தம்கூட தம்பால் ஈடுபடுத்த இயலாமையை அவர் தோல்வியாக வேக் கருதியிருப்பார். தரும லக்ஷ்மியின் வெற்றியில் பெரியவாளுக்கு அதிகப் பங்குண்டு.

பிரளயத்தில் வேதங்கள் மறைந்தபோது பகவான் அவதரித்து அவற்றை மீட்டதாகப் புராணங்கள் கூறும். புராண கால ராக்ஷதர்கள் கலி காலத்தில் மக்கள் புத்திகுள்ளேயே புகுந்து கொண்டது போல, புராணகாலப் பிரளயத்துக்குப் பதிலாக நவீன காலத்தில் மக்களின் உணர்வுகளே ஒரு பிரளயமாகப் பொங்கி வேத வாழ்வை அழிக்கும்போது வேதோத்தாரணம் செய்வதற்காக எம்பிரான் ஸ்ரீபெரியவாளாக வந்திருக்கிறார் எனலாம். வேத ரக்ஷணமே அவதாரத்தின் முக்கிய இலட்சணம் எனில் பெரியவாளைவிட ஓர் அவதார புருஷருமுண்டா?

முற்றிலும் எதிரிடையான ஒரு சூழ்நிலையில், அச் சூழ்நிலைக்காகத் தமது ப்ராசீன தர்மத்தில் அணுவளவும் விட்டுக் கொடுக்காமல் ஒருவர் வாழ்வதே அதிசயம். படாடோபமாகப் பொங்கிவரும் அலைகளோடு பொருது மெல்ல மெல்ல அவற்றை அடக்கிச் சுழலையும் பிராசீன தருமத்துக்கு ஓரளவேனும் இசைவாகச் செய்வது பேர் அற்புதமேயாகும்.

இந்த அற்புதத்தை வெகு அடக்கமாகச் சாதித்து வருபவர் பெரியவாள். தாம் போராடுவதாகவோ, சவால் விடுவதாகவோ அவர் பகட்டாகக் காட்டிக் கொள்வதே இல்லை.

புரட்சிகரமான தீவிர த்திட்டங்கள் எதுவும் போடுவதும் இல்லை. எனினும் எளிமையாகச் செயலாற்றியே கோடாநுகோடி மக்களைத் தம்புறம் ஓரளவேனும் திருப்பி கொண்டிருக்கிறார். வைதிகத்துக்கு அழுத்தமான வாழ்வு நம் நாட்டில் கிட்டா விடினும் வேதநெறி செத்து விடாது என்ற நிலையை நிச்சயப் படுத்தி விட்டார். யமன் வாயில் அகப்பட்ட உயிரை மீட்பது போல், மரணத்தருவாயில் இருந்த சனாதன தரும வாழ்வைக் காப்பாற்றி விட்டார். இறைவனருளில் அது இன்னும் பலம் பெற்று சுய சக்தியில் எழுந்து நிற்குமளவு பெரியவாள் நம்மிடை இருக்கவேண்டும்.

பெரியவாளுடைய இந்த சாதனை ராஜாங்க பலம் கொண்டோ, ஆள் பலம் கொண்டோ, பண பலம் கொண்டோ, ஆற்றப்பட்டதல்ல. தனியொரு மனிதரின் அந்தரங்க சுத்தியின் சக்தியால், தவச் சக்தியால், அன்புச்சக்தி யாலேயே இந்த அற்புதம் சாதிக்கப்பட்டிருக்கிறது. இதில் அவரை ஆதி ஆசாரியருடனே வைத்துப் போற்ற வேண்டும். பொதுவாகப் பண்டைக்காலத்தில் 'அரசன் எவ்வழி அவ்வழி மக்கள், என்பது நியதி, அப்பர், ஞானசம்பந்தர் போன்றவர்கள் முறையே மகேந்திரப் பல்லவன், நெடுமாற பாண்டியன் ஆகியோரைத் தம் வழிப்படுத்திய அளவில் மக்கள் அனைவருமே அந்நெறி சார்ந்தனர். ஆனால் ஆதி சங்கரர் இவ்விதம் அரச பலம் கொண்டு தம் சித்தாந்தத்தை நிலை நாட்டவில்லை என்பது குறிப்பிட வேண்டியது. (இதனால் அப்பரடிகளையும் ஆளுடை பிள்ளைகளையும் இழித்துப் பேசியதாக யாரும் எண்ண வேண்டா, சரித்திர உண்மையைச் சொன்னேன், அவ்வளவே!) ஸ்ரீ ஆதிசங்கரருக்குச் சமமான சக்தி, அல்லது ஆதி சங்கரரது சக்தியே நம் பெரியவாளிடம் உறைந்திருப்பதால் தான் அவர் இவ்வளவு செய்ய முடிந்திருக்கிறது.

இனி இவ்விரு மகான்களுக்குள்ளேயே ஒரு வேற்றுமை சிலருக்குப் புலப்படுவதைக் குறிப்பிடுகிறேன். ஆதி சங்கரர் அத்வைதத்தைச் சொன்ன அளவுக்கு நம் பெரியவாள் சொல்வதில்லை; இவர் ஞானத்தைவிட பக்தியையே அதிகமாகச் சொல்கிறார், என்பது சிலரது அபிப்பிராயம்.



